உ

சிவமயம்.

# பஞ்ச சபைகளும் -
# அருட் பாடல்களும்



மார்கழித் திருவாதிரை வெளியீடு

28-12-1966.

உ
சிவமயம்



# பஞ்ச சபைகளும் - அருட் பாடல்களும்



தொகுத்தவர்
“ சித்தாந்த வித்தகர் ”
கயப்பாக்கம். திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்.



திரு. K. E. அருணசல முதலியார் அவர்கள் M.A., B.Com.,
ந ன் மு ய ற் சி



மார்கழித் திருவாதிரை வெளியீடு
28-12-1966.

உ

சிவமயம்

# முகவுரை

" எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்"

எல்லாம் வல்ல இறைவன் சிவபெருமான். அவனே தன் ஆடலால் மதலையாயினுன் என்னும் கந்தபுராணம். அப் பெருமான் இயக்க இயங்குகின்றன இவ்வுலகிலுள்ள உயிர்க் கூட்டங்கள். தெய்வம் ஒன்றுதான். அதன் பேதம் அனந்தம். உயிர்கள் உய்யும்பொருட்டு சிவபெருமான் தன் இச்சையால் ஞானமயமான திருமேனிகளைத் தாங்கிக்கொண்டு வெளிவந்து மறைகின்ருன். இத்தகைய மூர்த்தங்கள் இருபத்தைந்து. அறுபத்து நான்குமாம் என்பர் அறிஞர். இவற்றுள் ஒன்று ஸ்ரீ நடராஜபெருமான் மூர்த்தம். இப்பரந்த உலகிலுள்ள உயிர்கள் எடுத்துள்ள உடம்புகளுடன் கூடி வினையை அனுபவித்துத் தன் திருவடிகளில் வந்து சேரவேண்டும் என்பதே அவனிச்சை.

எனவே, அப்பெருமான் நாம் ஆர்த்த பிறவித்துயர் கெட ஆர்த்தாடுகின்ருன். அவன் ஆட உயிர்கள் இயங்குகின்றன. அவன் உயிர்களுக்கு உடம்புகளைப் படைக்கின்ருன். அவ் வுடம்புகளைக் காக்கின்ருன். பின் அவைகளைச் சம்மாரம் (இளைப் பாறச்) செய்கின்ருன். உடம்புகளிலுள்ள உயிர்களை மறைக் கின்ருன். (அவற்றின் வினைகளைப் பக்குவப்படுத்தல்) கடைசியாக அவ்வுயிர்களுக்கு அருள் புரிகின்ருன். இவைகளே (பஞ்ச கிருத்யம்) ஐந்தொழில்கள் எனப்பெறும். இவற்றைப் புரியும் மூர்த்தம் ஸ்ரீ நடராஜப்பெருமான் மூர்த்தமேயாம்.

இந் நடனம் (கூத்து) நிகழும் இடங்கள் பல. சிறப்பாக விளங்கும் இடங்கள் (தலங்கள்) ஐந்து என்பர் ஆன்ருேர். இவ்விடங்களைப் பஞ்சசபைகள் என்று கூறுவதுமுண்டு. ஐந்து மன்றங்கள் எனவும் வழங்கப்பெறும். அவையாவன: 1. திருவாலங்காடு (இரத்தினசபை) 2. சிதம்பரம் (கனகசபை) 3. மதுரை (ரஜிதசபை) 4. திருநெல்வேலி (தாமிரசபை) 5. திருக்குற்ருலம் (சித்ரசபை).

இந் நடனஞ்செய்வது குறித்துச் சில அன்பர்கள் நகைச்சுவையாகப் பேசுவதும் இங்கு சிந்திக்கவேண்டியதொன்று. ஸ்ரீ நடராஜப்பெருமான் திருவாலங்காட்டில் திருக்கூத்து ஆடி ஆடி இளைப்புற்ருனும். இதனைத் தாங்கமுடியாமல் சற்று குளிர்ந்த இடத்திற்குச் செல்லலாம் என்று எண்ணிச் சிதம்பரத்தை யடைந்தான். அங்கும் ஆடினுன். அங்கும் மேலும் வெப்பமாயிற்று. இளைப்பும் அதிகரித்தது. இன்னும் கொஞ்சம் தெற்கு நோக்கிச் சென்ருல் தென்றல் காற்று வருமென்று நினைத்து மதுரையை யடைந்தானும். அங்கும் :ஆடினுனும். அங்கும் குளிர்ச்சி ஏற்படவில்லை. தன் களைப்பும் நீங்கவில்லையாம். மேலும் தெற்கு நோக்கிச்செல்ல எண்ணித் திருநெல்வேலிக்குச் சென்று அங்கும் ஆடினுனும். ஆயினும் வெப்பம் தணியாததால் இன்னும் சற்றுத் தெற்கு செல்லாம் என்று நினைத்துக் கடைசியாகத் திருக்குற்ருலம் போய்ச் சேர்ந்தானும். அங்கு ஆடியதும் உடம்பு இளைப்பும் தீர்ந்து குளிர்ச்சியும் ஏற்பட்டுச் சுகமாக விருந்ததாம். எனவே அங்கேயே அப்பெருமான் நிலையாகத் தங்கிவிட்டானும்.

இத்தகைய ஐம்பெரும் மன்றங்களைப் பற்றிய வரலாறுகளை எழுதி அவ்வத் தலங்களுக்குரிய அருட்பாடல்களைச் சிலவற்றைச் சேர்த்தும் ஒரு சிறு நூலாக வெளியிட என்னை ஊக்குவித்தவர் என் ஆப்த நண்பர் திரு மு. சிவானந்தமுதலியார் அவர்கள். பல மாதங்கள் கழிந்தன. வாய்ப்பு ஏற்படவில்லையே என ஏங்கினேன். அதுகாலை, திருவேட்டீசுவரர் ஆலயத்தில் சென்ற ஆண்டு மார்கழித் திங்களில் "திருவெம்பாவை,

திருப்பள்ளியெழுச்சி'' விரிவுரையாற்றினேன். அதன் பூர்த்தி விழா வன்று என் மதிப்பிற்குரிய பேரன்பர், திரு K. சுப்ரமணிய ஐயர், B. A., அவர்கள் இச்சிறு நூலை எழுதி வெளியிடுமாறு பணித்தார்கள். இது அசரிரி போன்று என் பழைய எண்ணத்தைப் பலப்படுத்தி எழுதுமாறு தூண்டியது.

‘‘பஞ்ச சபைகளும், அருட்பாடல்களும்'' என்ற சிறு நூலை மார்கழித் திருவாதிரைத் திருநாளன்று ‘‘மார்கழித் திருவாதிரை வெளியீடாக'' வெளியிடுகின்றேன். இவ்வெளியீடு வெளிவர விளம்பரம் மூலம் உதவி புரிந்தவர் என் மதிப்புக்குரிய நண்பர் திரு K. E. அருணசலமுதலியார், M. A., B. Com., அவர்கள். இவர்களுக்கும், இதனை எழுதுமாறு தூண்டிய மெய்யன்பர்களுக்கும், விளம்பரம் உதவிய நண்பர்களுக்கும் உரிய காலத்தில் இதனை அழகுற அச்சிட்டுத்தந்த ‘‘பாரி அச்சகம்'' உரிமையாளர் மெய்யன்பர் திரு. மு. நாராயணன் செட்டியார் அவர்கட்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்பர்கள் சௌகர்யத்திற்காகத் தேவாரப்பாடல்களுடன் ஏனைய 8, 9, 10, 11, 12-ஆந் திருமுறைகளுள் சில பாடல்களையும் ஆங்காங்கு சேர்த்துள்ளேன். தவிர அருணகிரிநாதர், குமரகுருபர சுவாமிகள் முதலிய அருளாளர்கள் அருளிய அருட்பாடல்களையும் தொகுத்து ஒரு அநுபந்தமாக இந்நூலின் கடைசியில் சேர்த்துள்ளேன். இச்சிறுநூலைச் சைவமெய்யன்பர்கள் பெற்றுப் பக்தி சிரத்தையுடன் நாள்தோறும் படனம் செய்து ஸ்ரீ நடராஜபெருமான் திருவருளுக்கு ஆளாவார்களாக! வாழ்க சைவம்!! வாழ்க சீரடியாரெல்லாம்!! வையகமும் துயர் தீர்கவே!!!

23, வேளாளர் தெரு
அமைந்தகரை
சென்னை 29.
8-12-66

இங்ஙனம்:

கயப்பாக்கம். சோமசுந்தரம்

சிவமயம்

# நூல்

## "பஞ்ச சபைகளும் அருட்பாடல்களும்"

### 1. திருவாலங்காடு (இரத்தினசபை)

வரலாறு:

இத்தலம் வடமொழியில் வடாரண்யம் என்று வழங்கும்: நடராஜ பெருமான் நிருத்தம் (நடனம்) செய்யும் ஐந்து சபைகளுள் ஒன்று. இதற்கு இரத்தினசபை என்ற பெயரு முண்டு. சிவபெருமான் தம்மோடு வாதம்செய்த காளியம் மையைத் தோல்வி அடையச் செய்த தலம். தாண்டவம் ஊர்த்துவ தாண்டவம் எனப்பெறும். இச்சரித்திரம் பதிகங்களில் காணத்தக்கது. பதஞ்சலி, வியாக்கிரபாதர் இத்தலத்தில் கார்க்கோடகன், முஞ்சிகேசர் என்னும் திருநாமத்துடன் நடன தரிசனஞ் செய்யா நிற்பர். காரைக்காலம்மையார் திருக்கயிலை யினின்றும் இங்கெழுந்தருளித் திருத்தலையாலே பிரதட்சிணம் செய்து சுவாமியின் திருவடிக்கீழ் ஆடியும் பாடியும் ஆனந் தானுபவம் செய்துகொண்டு எழுந்தருளியுள்ளார். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் அம்மையார் தலையாலே நடந்த தல மென்று கருதி மிதித்தற்கஞ்சி அடுத்த ஊரிலே தங்கியபோது அவ்விரவில் பரமேசுவரன் அவர் கனவில்தோன்றிப் "பாட மறந்தனையோ?" எனப் பிள்ளையார் பரமன் திருவருளைவியந்து "துஞ்சவருவாரும்" எனத்தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். சுந்தரமூர்த்தி நாயனுரும் இத்தலத்தைத் தூரத்தேயிருந்து வணங்கி "முத்தா முத்தி" எனத்தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். நீலியினுல் இறந்த வணிகன் பொருட்டு வாக்களித்த 49 வேளாளர்கள் தீப்பாய்ந்து உயிர் துறந்து சத்தியம்காத்த தலம். இத்தலம் சமீபத்திலுள்ள பழையனூரோடு சேர்த்துச் சொல்லியிருக்கிறது.

[குறிப்பு : இந்தவிடம் அண்மையில் சென்னை அற நிலையப் பாதுகாப்புத்துறையின் உதவிகொண்டு சீர்செய்யப்பெற்றுச் "சாட்சி நாதர்" கோயிலுடன் சிறப்புடன் விளங்குகிறது. வாழ்க திருப்பணிசெய்த சிவபக்தர்கள்!]

சுவாமி: ஊர்த்துவதாண்டவர்; தேவியார்; வண்டார் குழலியம்மை; தீர்த்தம்: முத்திதீர்த்தம்; விருட்சம்; பலா; சபை; இரத்தினசபை; தாண்டவம்; ஊர்த்துவதாண்டவம்.

இத்தலத்திற்குத் திருஞான சம்பந்தசுவாமிகள் திருப்பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பதிகம் இரண்டும் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருப்பதிகம் ஒன்றும் ஆக நான்கு திருப்பதிகங்கள் உண்டு.

பதிகங்கள்:

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

பண் - தக்கராகம்] [1-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்

துஞ்ச வருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகை [கேட்டு
அஞ்சும்பழையனூர் ஆலங்காட்டெம் மடிகளே. 1

சாந்தங்கமழ் மறுகிற் சண்பைஞான சம்பந்தன்
ஆந்தண்பழையனூர் ஆலங்காட்டெம் மடிகளை
வேந்தனருளாலே விரித்தபாடல் இவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாம் தீர்த்தமாகச் சேர்வாரே. 12

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசு நாயனர்

திருநேரிசை] [4-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

வெள்ள நீர்ச் சடையர் போலும் விரும்புவார்க் கெளியர் [போலும்
உள்ளுளே யுருகிநின் றங் குகப்பவர்க் கன்பர் போலும்
கள்ளமே வினைகளெல்லாம் கரிசறுத் திடுவர்போலும்
அள்ளலம் பழனமேய வாலங்காட் டடிகளாரே. 1

கூடினு ருமைதனேடே குறிப்புடை வேடங்கொண்டு
சூடினர் கங்கையாளைச் சுவறிடு சடையர்போலும்
பாடினர் சாமவேதம் பைம்பொழில் பழனமேயார்
ஆடினர் காளிகாண ஆலங்காட் டடிகளாரே. 8

திருத்தாண்டகம்] [6-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

ஒன்ரு வுலகனைத்து மானர் தாமே
ஊழிதோ றூழி யுயர்ந்தார் தாமே
நின்ருகி யெங்கு நிமிர்ந்தார் தாமே
நீர்வளிதீ யாகாய மானர் தாமே
கொன்ருடுங் கூற்றை யுதைத்தார் தாமே
கோலப் பழனை யுடைத்தார் தாமே
சென்ருடு தீர்த்தங்க ளானர் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 1

அல்லும் பகலுமாய் நின்ருர்தாமே
அந்தியுஞ் சந்தியு மானர் தாமே
சொல்லும் பொருளெலா மானர் தாமே
தோத்திரமுஞ் சாத்திரமு மானர் தாமே

பல்லுரைக்கும் பாவெலா மானுர் தாமே
பழனை பதியா வுடையார் தாமே
செல்லு நெறிகாட்ட வல்லார் தாமே
திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே. 5

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி நாயனர்

பண்-பழம்பஞ்சுரம்] [7-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

முத்தா முத்தி தரவல்ல
முகிழ்மென் முலையா ளுமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டும்
சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும்
பரமா பழைய னூர்மேய
அத்தா வாலங் காடாவுன்
னடியார்க் கடியே னுவேனே. 1

பத்தர் சித்தர் பலரேத்தும்
பரமன் பழைய னூர்மேய
அத்தன் ஆலங் காடன்றன்
அடிமைத் திறமே அன்பாகிச்
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச்
சிறுவ னூரன் ஒண்டமிழ்கள்
பத்தும் பாடி யாடுவார்
பரமன் னடியே பணிவாரே. 10

திருச்சிற்றம்பலம்.

காரைக்காலம்மையார் அருளிச்செய்த
மூத்த திருப்பதிகம்

பண்-நட்டபாடை] [11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

கொங்கை திரங்கி நரம்பெழுந்து
குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கணீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர்பெண்பேய்
தங்கி யலறி யுலறு காட்டிற்
றாழ்சடை யெட்டுத் திசையும்வீசி
அங்கங் குளிர்ந்தன லாடுமெங்கள்
அப்ப னிடந்திரு வாலங்காடே. 1

ஒப்பினை யில்லவன் பேய்கள்கூடி
யொன்றினை யொன்றடித் தொக்கலித்துப்
பப்பினை யிட்டுப் பகண்டைபாடப்
பாடிருந் தன்னரி யாழமைப்ப
அப்பனை யணிதிரு வாலங்காட்
டெடிகளைச் செடிதலைக் காரைக்காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும்வல்லார்
சிவகதி சேர்ந்தின்ப மெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்.

பண்-இந்தளம்] [11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவ மீகைசூரை காரை படர்ந்தெங்கும்
சுட்டசுடலை சூழ்ந்தகள்ளி சோர்ந்த குடர்கௌவப்
பட்டபிணங்கள் பரந்தகாட்டிற்பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளிபாடக் குழகனாடுமே. 1

சூடுமதியஞ் சடைமே லுடையார் சுழல்வார் திருநட்டம்
ஆடுமரவ மரையிலார்த்த வூடிகளருளாலே
காடுமலிந்த கனல்வாயெயிதற்றுக் காரகைக்காற்
[பேய்தன்
பாடல்பத்தும் பாடியாடப் பாவநாசமே. 11

திருச்சிற்றம்பலம்.

## 2. சிதம்பரம் (கோயில்) கனகசபை

**வரலாறு:**

இத்தலம் ஸ்ரீ சிதம்பரம், தில்லைவனம், பெரும்பற்றப்புலியூர், புண்டரீகபுரம், வியாக்கிரபுரம், தகராகாச க்ஷேத்திரம், பூலோக கயிலாயம் என்னும் பல பெயருடையது. பிண்டமாகிய சரீரத்திலே இருதயத்தானமாகிய தகர புண்டரீக வீட்டினுள் பிரமமாய் சிவனிருப்பது போல், பிரமாண்டமாகிய உலகத்திலே தில்லைவனமாகிய தகர வீட்டினுள் பிரமமாகிய நடராஜப் பெருமான் இருந்து லோகானுக்கிரகத்தின் பொருட்டுச் சிவ காம வல்லியார் காணப் பஞ்ச கிருந்திய ஞான நடனஞ் செய்யும் பெருமை வாய்ந்தது.

இங்கு பதஞ்சலி, வியாக்கிரபாதர், உபமன்னியு முனிவர் திருவுடையந்தணர் மூவாயிரவர், வியாசர், சுகர், சௌனகர், சைமினி, சூதர் முதலிய முனிவர்களும், ஸ்ரீ மணிவாசகப் பெருமான், திருநீலகண்ட நாயனுர், திருநாளைப்போவார் நாயனுர், கூற்றுவ நாயனுர். கணம்புல்ல நாயனுர், கோச் செங்கட் சோழ நாயனுர், சேக்கிழார் நாயனுர், என்னும் உண்மை நாயன்மார்களும் மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார் என்னும் சந்தானுசாரியர்களும், சேந் தனுர், பெற்ருன் சாம்பான், இரணியவர்மன் முதலிய மெய்யடி யார்களும் வழிபட்டு முத்தி பெற்றருளினர்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் தில்லைவாழந்தண ரைச் சிவசாருப்யராய்த் தரிசித்துப் பாடினுர். திருநாவுக்கரசு

நாயனுர் மிதித்தற்கஞ்சித் திருவீதியில் அங்கப்பிரதட்சிணம் செய்தார். சுந்தரமூர்த்தி நாயனுர் திருப்பேரூரிலே கண்ட திருத்த தரிசனத்தைத் தினைத்துப் "பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்ருமன்றே" என்று உவகை கொண்டருளினர்.

ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் புத்தரை வாதில் வென்று ஊமைப் பெண்ணைப் பேசுவித்துச் சைவத்தாபனம் செய்தருளினர். நம்பியாண்டார் நம்பிகள் தேவாரம் முதலிய திருவருட்டிருமுறைகளைத் திருவறையிலே கண்டு உதவியருளினர். தொண்டர் சீர்பரவவல்ல சேக்கிழார்பெருமான் பெரியபுராணஞ் செய்து அரங்கேற்றியருளினர். உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பெற்ருன் சாம்பானுக்கும், முள்ளிச் செடிக்கும் முத்தி கொடுத்தருளினர்.

இன்னும் இத்தலம் தரிசிக்க முத்தி தரும் தன்மையது. அத்தயாமத்தில் சகல க்ஷேத்திரங்களிலுமுள்ள மூர்த்திகளின் கலைகள் வந்து ஒடுங்குவது. சேரமான் பெருமாள் நாயனுர் சுந்தரமூர்த்தி நாயனுரைத் தோழராகப் பெறும்பொருட்டுச் சிலம்பொலியைத் தாழ்ப்பித்துப் பொன்வண்ணத்தந்தாதியைப் பெற்றது. வேடமே மெய்ப்பொருள் எனவீழ்ந்த மெய்ப்பொருள் நாயனுருக்குச் சிலம்பொலி கேட்பித்தது.

இத்தலத்திற்குத் திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய திருப்பதிகம் இரண்டும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருப்பதிகங்கள் எட்டும், சுந்தரமூர்த்தி நாயனுர் அருளிய திருப்பதிகம் ஒன்றும் ஆகப்பதிகம் பதினென்றைப் பெற்றுள்ளது. திருவாசகப் பதிகங்கள் இருபத்தைந்தும், திருக்கோவையார் பாடல்கள் நானூறும், திருவிசைப்பாப் பதிகங்கள் பதினைந்தும் திருப்பல்லாண்டு பதிகம் ஒன்றும், பத்தாந் திருமுறையில் பல திருமந்திரப் பாடல்களும், பதினொராந்திருமுறையில், பொன்வண்ணத்தந்தாதி, கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தங்களும், பெரியபுராணம் திருவிருத்தங்களும் ஆகிய அருட்பாடல்களுண்டு.

வடமொழியில் சாந்தோக்பம், கைவல்யம் என்னும் உப நிடதங்களும், மகேதிகாசமாகிய சிவரகசியமும், சூதசம்மிதை சிதம்பர மான்மியம், புண்டரீகபுர மான்மியம், வியாக்கிர புர மான்மியம், தில்லைவன மான்மியம் முதலியனவும், தமிழில் கோயிற் புராணம், சிதம்பர புராணம், சபா நடேசர் புராணம் முதலியனவும் இத்தலத்தின் மகாத்மியத்தைக் கூறும்.

திருமூலட்டானம்: சுவாமி திருமூல நாதர்; தேவியார்: உமையம்மையார்.

கனகசபை : சுவாமி : சபாநாயகர்; தேவியார்: சிவகாம வல்லியம்மையார்.

தீர்த்தம்: சிவகங்கை, பரமானந்தகூபம், புலிமடு முதலிய பத்துத் தீர்த்தங்களுண்டு.

தலவிருட்சம் : ஆலமரம்

பதிகங்கள்:

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனூர்

பண்-குறிஞ்சி] [1-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

கற்றுங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றூர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்று வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்று நின்றுரைப் பற்று பாவமே. 1

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசு நாயனர்

திருநேரிசை] [4-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

பத்தனய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகீ
எத்தினற் பத்திசெய்கேன் என்னைநீ யிகழவேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் னுடல்காண்பா னடியனேன் வந்தவாறே.

கருத்தனய்ப் பாடமாட்டேன் காம்பன தோளிபங்கா
ஒருத்தரா லறியவொண்ணுத் திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லைதன்னுள் திகழ்ந்தசிற் றம்பலத்தே
நிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

திருவிருத்தம்] [4-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்தபொற்
பாதமுங் காணப்பெற்றுல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
யிந்தமா நிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

திருக்குறுந்தொகை] [5-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனே.

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம்] [6-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மங்குல் மதிதவழு மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்ரு லத்தார்
குடமூக்கி லுள்ளார் போய்க் கொள்ளம் பூதூர்த்
தங்கு மிடமறியார் சால நாளார்
தரும புரத்துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே.

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி நாயனர்

பண்-குறிஞ்சி] [7-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மடித்தாடு மடிமைக்க ணன்றியே
மனனேநீ வாழு நாளும்
தடுத்தாட்டித் தருமனர் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
சுடுத்தாடு கரதலத்தில் தமருகமும்
எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச் சிற்றம்பலத்தெம்
பெருமானைப் பெற்ரு மன்றே. 1

பாரூரு மரவல்குல் உமைநங்கை
யவள்பங்கன் பைங்க ணேற்றன்
ஊரூரன் றருமனர் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட் கொள்வான்

ஆரூரன் றம்பிரரன் ஆரூரன் மீகொங்கில்
அணி காஞ்சி வாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்
றம்பலத்தே பெற்ரு மன்றே.

திருச்சிற்றம்பலம்.

மாணிக்கவாசக சுவாமிகள்

திருவாசகம்] [8-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

உடையா ளுன்ற னடுவிருக்கும்
உடையா ணடுவுள் நீயிருத்தி
அடியே னடுவுள் இருவீரும்
இருப்ப தாஞ லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்கும்
அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ண முன்னின்றே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கோவையார்] [8-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்து
மென் சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலினுய்ந்த
வொண்டீ ந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ வன்றி
யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்
கொலாம் புகுந்தெய் தியதே.

திருச்சிற்றம்பலம்.

திருவிசைப்பா] [9-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

திருச்சிற்றம்பலம்.

திருப்பல்லாண்டு] [9-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப்
பாற்கட லீந்த பிரான்
மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன்
மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே யிட மாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே
பல்லாண்டு கூறுது மே.

திருச்சிற்றம்பலம்.

திருமந்திரம்] [10-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

சிற்பரஞ் சோதிச் சிவானந்தக் கூத்தனை
சொற்பத மாமந்த சுந்தரக் கூத்தனை
பொற்பதிக் கூத்தனைப் போற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரே.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார் நம்பிகள்

கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம்] [11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

வருவாசகத்தினின் முற்றுணர்ந்தோனைவண்டில்லை
மன்னைத்
திருவாதவூர்ச் சிவபாத்தியன்செய் திருச்சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண்டேயும் மற்றப்
[பொருளைத்
தெருளாத வுள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே.

திருச்சிற்றம்பலம்.

சேரமான் பெருமாணுயனுர் அருளிய
பொன்வண்ணத்தந்தாதி

[11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

தாழுஞ்சடை சடைமேலது கங்கை
யக்கங்கை நங்கை
வாழுஞ் சடை சடைமேலது திங்க
ளங்கத் திங்கட்பிள்ளை
பொழுஞ்சடை சடைமேலது
பொங்கர வவ்வரவம்
வாழுஞ்சடை சடைமேலது கொன்றை
யெம்மா முனிக்கே.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப் பிள்ளையார் அருளிய
கோயினுன்மணிமாலை

[11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

பூமே லயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம்-பாமேவு

மேத்துகந்தான் றில்லை யிடத்துகந்தான் அம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக் குடை. 1

அடியொன்று பாதல மேழிற்கு மப்புறப்பட்டதிப்பால்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங் கடந்தது முற்றும்
வெள்ளைப்
பொடியொன்று தோளெட்டுத் திக்கின் புறத்தன
பூங்கரும்பின்
செடியொன்று தில்லைச் சிற்றம்பலத்தான்றன்
[திருநடமே.

திருச்சிற்றம்பலம்.

சேக்கிழார் சுவாமிகள் அருளிய

பெரியபுராணம்] [12-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

திருச்சிற்றம்பலம்.

## 3. மதுரை (வெள்ளியம்பலம்)

**வரலாறு:**

இத்தலம் மதுரையென்று பிரசித்தமாக வழங்கும். முதல் தனஞ்சயன் என்னும் வணிகன் கண்டுவந்து அக்காலத்து அரசாண்ட குலசேகர பாண்டியனுக்குத் தெரிவிக்க அவன் சிவாக்ஞையால் திருநகரம்கண்டபோது சிவபெருமான் தம் சிரத்திற்றரித்த பிறையிடத்துள்ள (மது) அமிர்தத்தைத் தெளித்து சுத்தமாக்கிய காரணத்தால் மதுரை எனவும், பாண்டியனிடம் கொண்ட பகையால் வருணன் ஏவிய மேகங்களின் வர்ஷத்தில் மதுரைஅழியாதபடிச் சோமசுந்தரக்கடவுள் ஏவிய நான்கு மேகங்கள் கூடமாகக் கவிந்து ரட்சித்தமையின் நான் மாடக்கூடல் எனவும், கடல்வெள்ளத்தால் அழிந்த மதுரையை

மீண்டும் அமைக்க எண்ணிய பாண்டியன் கருத்து முற்றுப் பெற சுந்தரேசப்பெருமான் தமது சரீரத்தில் அணிந்த ஆலவாய் (பாம்பு) ஒன்றினல் எல்லை குறித்துக்காட்டின மையின் திருவாலவாய் எனவும், கடம்பு தல விருட்சமாதலின் கடம்ப வனம் எனவும், ஆதாரங்கடந்த நிராதாரப் பரவெளித் தலமாதலின் துவாதசாந்தமெனவும், சிவபெருமான் உமாதேவி யாரோடு எழுந்தருளியிருந்து அரசுசெய்தமையின் பூலோக கயிலாயம், சிவராஜதானி, இன்னும் இவைபோல்வனவாகிய பற்பல காரணங்களால் பலதிருநாமங்களையுடையது. பாண்டிய நாட்டின் தலைநகரம். பொய்யடிமையில்லாத புலவர்களாகிய நக்கீரர், கபிலர், பரணர் முதலிய உண்மைப்புலவர் எழுந்தருளி யிருந்து பல பாசுரம் பாடிய பழம்பதி; மும்மைச்சங்கமும் நிலை பெற்று முத்தமிழாராய்ந்த முதுநகர்; சிவபெருமான் திருவுருக் கொடு எழுந்தருளி எண்ணெண்ணுடலியற்றிய திவ்யதலம். மூர்த்தி நாயனர் எழுந்தருளியிருந்து பெருமானுக்குச் சந்தன கைங்கர்யம்செய்து கொண்டுவந்து அப்பெருமானருளால் அந் நாட்டையாண்டு முத்திபெற்ற மூதூர்; ஐந்துசபைகளுள் இது ரஜிதசபை; (வெள்ளியம்பலம்) சமணசமயச் சார்புடையவராக நெடுமாறனர் விளங்க அவர் தேவியாராகிய மங்கையர்கரசி யாரும் அவர் தம் மந்திரியாகிய குலச்சிறையாரும் வேண்டிக் கொண்டதற்கிணங்கத் திருஞானசம்பந்தர் இங்குவந்து சமணிருளை யொழித்துச் சைவஒளியைப் பரப்பியருளிய தலம்; மணிவாசகப்பெருமான் பொருட்டுச் சுந்தரேசப்பெருமான் பிட்டுக்கு மண்சுமந்து அவ்வரசனல் பிரம்படிபட்டு அவர்கள் உய்யுமாறு செய்ததலம்; காசிமடம் கண்டவரும், சைவசித் தாந்த பானுவுமாகிய குமரகுருபர சுவாமிகள் திருமலை நாயக்கர் காலத்து இங்கு எழுந்தருளி மீனட்சியம்மையார் மீது பல பிர பந்தங்கள் பாடி யருள்பெற்றதலம்; இன்னும் பலமகிமாதி சயங்கள் நிறைந்த திருத்தலம். விரிப்பிற்பெருகும்.

சுவாமி:—சொக்கலிங்கமூர்த்தி

தேவியார்: மீனட்சியம்மையார்.

விநாயகர்: சித்திவிநாயகர்.

சபை: வெள்ளியம்பலம்.

நடனம்: கான்மாறியாடியது.

கல்லானைக்குக் கரும்பருந்திய எல்லாம் வல்லசித்தர் சந்நிதி சண்டேசுரர் சந்நிதிக்கு மேற்கிலுள்ளது; விமானம் எட்டுவெள்ளையானைகள் தாங்கும் இந்திரவிமானம்.

தலவிருட்சம்: கடம்பு.

தீர்த்தம்: பொற்றுமரை, எழுகடல், வைகை முதலியன.

இத்தலத்திற்கு வடமொழியில் ஹாலாஸ்ய மாஹாத்மியம், நீபவனமாஹாத்மியம் முதலிய நூல்களும், தமிழில் திருவிளையாடற்புராணம், கடம்பவனபுராணம், வேப்பத்தூரார் திருவிளையாடல் முதலிய நூல்களும் இத்தலத்தின் பெருமையினைப் பகரும்.

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருப்பதிகங்கள் 9ம், திருநாவுக்கரசு நாயனர் அருளிய 2 பதிகங்களும் ஆகப்பதிகங்கள் பதினென்றுண்டு.

## திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர்
## திருவிருக்குக்குறள்

பண்-குறிஞ்சி] [1-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

நீல மாமிடற்,றால வாயிலான்
பால தாயினுர், ஞால மாள்வரே. 1

ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனுர், பால தாமினே. 3

அடிக ளாலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்றமிழ் செடிக ணீக்குமே. 11

திருச்சிற்றம்பலம்.

## திருநீற்றுத் திருப்பதிகம்

பண்-காந்தாரம்] [2-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான்
திருநீறே.

ஆற்ற லடல்விடை யேறும் ஆல வாயான்
திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர்
தாமே. 11

திருச்சிற்றம்பலம்.

பண்-கௌசிகம்] [3-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே. 1

அப்ப னுலவா யாதி யருளினல்
வெப்பந் தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11

திருச்சிற்றம்பலம்.

பண்-பழம்பஞ்சுரம்] [3-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி யமணொடு தேரரை
வாதில் வென் றழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே.
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையு மெம்மாதியே. 1

கூட வாலவாய்க் கோனை விடைகொண்டு
வாடன் மேனி யமணரை வாட்டிட
மாடக் காழிச் சம்பந்தன் மதித்தவிப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11

திருச்சிற்றம்பலம்.

பண்—புறநீர்மை] [3-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே. 1

வெற்றவே யடியா ரடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளை நீ றணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவி நின் றேத்தும்
ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவன்
உலகினி லியற்கையை யொழிந்திட்(டு)
அற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற
ஆலவா யாவது மிதுவே. 2

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன்
திருவடி யாங்கவை போற்றிக்

கன்னலம் பெரிய காழியுண் ஞான
    சம்பந்தன் செந்தமி ழிவைகொண்(டு)
இன்னலம் பாட வல்லவ ரிமையோர்
    ஏத்தவீற் றிருப்பவ ரின்றே. 11

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசு நாயனுர்

திருநேரிசை] [4-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

வேதியா வேதகீதா விண்ணவ ரண்ணுவென்றென்
ளுேதியே மலர்கடுவி யொருங்கிநின் கழல்கள்காணப்
பாதியோர் பெண்ணைவைத்தாய் படர்சடை மதியஞ்
ஆதியே யாலவாயி லப்பனே யருள்செயாயே. [சூடும்

திருச்சிற்றம்பலம்.

திருத்தாண்டகம்] [6-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
    முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கண் மூன்றும்
    வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீருத்
    தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
    சிவனடியே சிந்திக்கப் பெற்றே ஞனே. 1

மூவனை மூர்த்தியை மூவா மேனி
    யுடையானை மூவுலகுந் தானே யெங்கும்
பாவனைப் பாவ மறுப்பான் றன்னைப்
    படியெழுத லாகாத மங்கை யோடு

மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு
விரிகடலி னஞ்சுண் டமுத மீந்த
தேவனைத் தென்கூடற் றிருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னேனே. 6
வாயானை மனத்தானை மனத்து ணின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னேனே. 8

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயுடையார்

திருமுகப் பாசுரம்] [11-ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்.

## 4. திருநெல்வேலி (தாமிரசபை)

வரலாறு:

இத்தலம் சிவபெருமான் வேதசன்மர் என்னும் பக்தர் தமது நிவேதனத்திற்குக் கட்டிய நெல்லை வெள்ளங் கொள்ளாதபடிக் காத்தமையின் இப்பெயரெய்தியது. சுவாமி மூங்கிலடியில் முளைத்த காரணத்தால் வேணுவனம் எனவும் கூறப்பெறும். விஷ்ணுமூர்த்தி, பிரமதேவர், அகத்தியர் பூசித்து வழிபட்ட தலம். தாருகாவன ஐதீகம் இங்கு நடந்ததாகவும் புராணம்கூறும். இதற்குச்சான்று, சுவாமிக்குப்பின்புறமுள்ள பிராகாரத்தில் ஒரு அறையில் உள்ள சித்திரங்களால் நன்கு அறியலாம். பிக்ஷாடன உருவமும் ஒன்று உள்ளது. இக்குறிப்பு பதிகத்தும் காணலாம். இத்தலம் ஐந்துசபைகளுள் தாமிரசபையாகும்.

சுவாமி: நெல்லையப்பர், வேணுவனநாதர்

தேவியார்: காந்திமதியம்மையார்

தீர்த்தம்: தாமிரபரணி, சிந்துபூந்துறை.

இதற்குத் திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் ஒன்று உண்டு.

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர்

பண்-சாதாரி] [3–ஆந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்று மெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ் சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே
லியுறை செல்வர்தாமே. 1

என்றுமோ ரியல்பின ரெனநினை
வரியவ ரேறதேறிச்
சென்றுதாஞ் செடிச்சியர் மனைதொறும்
பலிகொளு மியல்பதுவே
துன்றுதண் பொழினுழைந் தெழுவிய
கேதகைப் போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வே
லியுறை செல்வர்தாமே. 2

பெருந்தண்மா மலர்மிசை யயனவ
னனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வே
லியுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடமல்கு புகலியுண்
ஞானசம் பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா
டக்கெடு மருவினையே. 11

திருச்சிற்றம்பலம்.

## 5 திருக்குற்றாலம் (சித்திரசபை)

வரலாறு:

இது தலவிருட்சம் குறும்பலாவாதலின் திருக்குறும்பலா என வழங்கும். திருக்குறும்பலா என ஒரு தனிப்பதிகம் இருத்தலையும் காண்க; முன்னர் அகத்திய முனிவர் எழுந்தருளியபோது இங்குள்ள வைணவப்பிராமணர் அவரை வெறுத்துத்துவேஷம் செய்தமையின் முனிவர் வைணவபாகவத வடிவங்கொண்டு வந்து திருக்கோயிலினுள் அவர் உபசரிப்பச்சென்று விட்டுணு மூர்த்தியின் திருமுடிமேல் தம் கரத்தைவைத்து அம் மூர்த்தியைச் சிவலிங்கமாக்கித் தலத்தையும் சிவத்தலமாக்கியதெனக் கந்தபுராணம் கூறுமாறுகாண்க. இது ஐந்து சபைகளுள் ஒன்றாய சித்ரசபையாகும்.

சுவாமி: குறும்பலா நாதர்

தேவியார்: குழல்வாய்மொழியம்மை

*விருட்சம்: குறும்பலா*
*தீர்த்தம்: சித்திரா நதி.*

*இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் அருளிய திருப்* **பதிகங்கள் இரண்டு உண்டு.**

*[குறிப்பு:—இச்சிறு நூலிலுள்ள தலவரலாறுகளெல்லாம் காலஞ்சென்ற என் சிறிய தந்தையார் - திருமுறையாராய்ச்சி வல்லுநரான கயப்பாக்கம். சதாசிவசெட்டியார் B. A., அவர்களால் எழுதப்பெற்றவை.]*

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர்

*பண்-குறிஞ்சி]* *[1-ஆந் திருமுறை*

*திருச்சிற்றம்பலம்.*

வம்பார் குன்றந் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றலம்
அம்பானெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலுந் நமரங்காள். 1

மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்
கோடலீன்று கொழுமுனைகூம்புங் குற்றலம்
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே. 11

*திருச்சிற்றம்பலம்.*

*பண்-காந்தாரம்]* *[2-ஆந் திருமுறை*

*திருச்சிற்றம்பலம்.*

திருந்த மதிசூடித் தெண்ணீர்
கடைக்கரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்ாத வேடத்தாற்
காடுறைதல் புரிந்தசெல்வர்

இருந்த விடம்வினவி லேலங்கமழ்
சோலையின வண்டியாழ்செய்
இருந்த மண நாறுங் குன்றிடஞ்சூழ்
தண்சாரற் குறும்பலாவே. 1

கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா
மேவிய கொல்லேற்றண்ணல்
நம்பா னடிபரவு நான்மறையான்
ஞானசம் பந்தன் சொன்ன
இன்பாய பாட லிவைபத்தும்
வல்லார் விரும்பிக் கேட்பார்
தம்பால தீவினைகள் போயகலு
நல்வினைக ளளரா வன்றே. 11

திருச்சிற்றம்பலம்.

நூல் முற்றும்

## அநுபந்தம்

### அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்

### I திருவாலங்காடு

புவிபுனல் காலுங் காட்டி சிகியொடு வானுஞ்சேர்த்தி
புதுமன மானும் பூட்டி யிடையூடே
பொறிபுல னீரைந் தாக்கி கருவிகள் நாலுங்காட்டி
புகல்வழி நாலைந் தாக்கி வருகாயம்
பலவினை நூறுங் காட்டி சுவமதி தானுஞ் சூட்டி
பசுபதி பாசங் காட்டி புலமாயப்
படிமிசை போவென் றோட்டி அடிமையை
நீவந்தேத்தி
பரகதி தானுங் காட்டி யருள்வாயே

சிவமய ஞானங் கேட்க தவமுநி வோரும் பார்க்க
திருநட மாடுங் கூத்தர் முருகோனே
திருவளர் மார்பன் போற்ற திசைமுக னும்போற்ற
ஜெகமொடு வானங் காக்க மயிலேறிக்
குவடொடு சூான் தோற்க எழுகடல் சூதந்தாக்கி
குதர்வடி வேலங் கோட்டு குமரேசா
குவலயம் யாவும் போற்ற பழனி வாலங்காட்டில்
குறமகள் பாதம் போற்று பெருமாளே.

## II சிதம்பரம்

இருவினையின் மதிம யங்கித் திரியாதே
எழுநரகி லுழலு நெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள்நி னைந்திட் டுணர்வாலே
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருக செம்பொற் கழலோனே
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே
கனகசபை மருவு கந்தப் பெருமாளே.

## III திருவாலவாய்

கலைமேவு ஞானப் பிரகாச
கடலாடி ஆசைக் கடலேறிப்
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மணமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவால வாயிற் பெருமாளே.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய
மீனுக்ஷியம்மை பிள்ளைத் தமிழ்

தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடு
மிளமென் பிடியே யெறிதரங்க
முடுக்கும் புவனங் கடந்துநின்ற
வொருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கு
முயிரோ வியமே மதுகரம்வாய்
மடக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்
IV திருநெல்வேலி

நீலமுகி லானகுழ லானமட வார்கள்தன
நேயமதி லேதினமு முழலாமல்
நீடுபுவி யாசைபொரு ளாசைமருளாகியயலை
நீரிலுழல் மீனதென முயலாமல்
காலனது நாவரவ வாயிலிடு தேரையென
காயமரு வாவிவிழ அணுகாமுன்
காதலுட னேதுமடி யார்களுட னடியொரு
கால்முருக வேளெனவு மருள்தாராய்
சோலைபரண் மீதுநிழ லாகதினை காவல்புரி
தோகைகுற மாதினுட னுறவாடிச்

சோரனென நாடிவரு வார்கள்வன வேடர்விழ
சோதிகதிர் வேலுருவு மயில்வீரா
கோலவழல் நீறுபுனை யாதிசரு வேசரொடு
கூடிவிளை யாடுமுமை தருசேயே
கோடுமுக வானைபிற கானதுணை* வாசுருதி
கூர்திருநெல் வேலியுறை பெருமாளே.

* "வாகுழகர், கோடிநகர் மேவிவளர் பெருமாளே."

V திருக்குற்ருலம்

முத்தோலை தனைக்கி ழித்தயி
லைப்போரி கலிச்சி வத்துமு
கத்தாம ரையிற்செ ருக்கிடும் விழிமானர்
முற்ருழி ளகிப்ப ணைத்தணி
கச்சார மறுத்த நித்தில
முத்தார் மழுத்து கிர்க்குறி அதனுலே
வித்தார கவித்தி றத்தினர்
பட்டோலை நிகர்த்த ணைத்தெழு
வெற்பான தனத்தில் நித்தலும் உழல்வேனே
மெய்த்தேவர் துதித்தி டத்தரு
பொற்பார்க மலப்ப தத்தினை
மெய்ப்பாக வழுத்தி டக்ருபை புரிவாயே
பத்தான முடித்த லைக்குவ
டிற்ருட அரக்க ருக்கிறை
பட்டாவி விடச்செயித்தவன் மருகோனே
பற்பாசன் மிகைச்சி ரத்தைய
றுத்தாத வனைச்சி னத்துறு
பற்போக உடைத்த தற்பரன் மகிழ்வோனே
கொத்தார்க தவிப்ப ழக்குலை
வித்தார வருக்கை யிற்சுளை
கொத்தோடு திரக்கு தித்தெழு கயலாரங்
கொட்டாசு ழியிற்கொ ழித்தெறி
சிற்ருறு தனிற்க ளித்திடு
குற்ருல ரிடத்தி லுற்றருள் பெருமாளே.